25th September 1958]

### *Mosquitoes*

*529 *Q*.—Sri A. VEDARATHNAM : கனம் ரெவினியு அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா —

(அ) கும்பகோணத்தில் கொசு ஒழிப்பிற்காக எடுத்துக்கொண்ட நடவடிக்கைகளின் பின்விளைவு பற்றி அரசாங்கத்திற்கு ஏதேனும் ரிப்போர்ட் உண்டா ?

(ஆ) அரசாங்கம் அது பற்றி என்ன நடவடிக்கை எடுத்துக்கொண்டிருக்கிறது ?

The Hon. Sri M. A. MANICKAVELU : (*a*) The Government received reports of an increase in the fly population in the town.

(*b*) Intensive fly-control measures were carried out by Pyrethrum spraying and by the tightening up of general sanitation and hygienic measures and the situation was brought under control.

Sri A. VEDARATHNAM : இந்த "பைலேரியல் கன்ட்ரோல் மெஷெர்ஸ் " பல ஜில்லாக்களில் எடுத்துக்கொண்டதாக அமைச்சர் அவர்கள் நேற்று அறிவித்தார்கள். எந்த ஜில்லாக்களிலாவது அந்தத் தொத்து நோய் பரவியிருக்கிறதா ? அப்படி இல்லையென்றால், தொத்து நோய் பரவ வேறு ஏதாவது காரணங்கள் இருந்திருக்கும். அதை ஆராய்ச்சி செய்தார்களா ?

The Hon. Sri M. A. MANICKAVELU : கும்பகோணத்தில் தான் இது மும்முரமாக எடுக்கப்பட்டது. அதன் பயனாக இந்தக் கொசுக்கள் அழிக்கப்பட்டுப் போனாலும் ஈக்கள் அதிகமாகிவிட்டன. காரணங்கள் கண்டு பிடிக்கப்பட்டு ஈக்களையும் அழிக்க நடவடிக்கைகள் எடுக்கப்படும்.

Mr. SPEAKER : 530-ம் நம்பர் கேள்விக்கு பதில் தயாராகயில்லை. அதை அடுத்த நாள் எடுத்துக் கொள்ளலாம்.

### *Kundah Project*

* 531 *Q*.—Sri J. MATHA GOWDER (on behalf of Sri K. Sattanatha Karayalar) : Will the Hon. the Minister for Electricity be pleased to state the reasons for the delay in paying compensation for the lands acquired for the Kundah Project?

The Hon. Sri V. RAMAIAH : About 906 acres of patta lands have to be acquired for the Kundah Hydro-Electric Project. There had been some delay in the payment of compensation for the lands acquired due to the following reasons :—

(1) Till January 1958, the land acquisition work for this project was attended to only by a Special Tahsildar. As it was however found that it was not possible for him to cope with the work, additional special staff consisting of a Special Deputy Collector, two Tahsildars, six Revenue Inspectors and other clerical staff was sanctioned in January 1958 to attend to the work expeditiously.

(2) Certain parties who had been awarded compensation by the Land Acquisition Officer had taken the matter to Court for enhanced compensation.

(3) Consequent on the formation of the Madras State Electricity Board on 1st July 1957, the declarations under Section 6 of the Land Acquisition Act were held up, pending a decision on the question of contribution from the Consolidated Fund of the State towards

[25th September 1958

the acquisition of lands for the State Electricity Board. It was decided in June 1958 to contribute 5 naye paise from the Consolidated Fund of the State towards each case of land acquisition for the State Electricity Board and the declarations under Section 6 which had been kept pending on this account have all been issued since then.

The Collector of the Nilgiris district has reported that there has been good progress of work after the employment of the special staff and it is hoped that hereafter it will be possible to expedite payment of compensation.

SRI J. MATHA GOWDER : ஸார், ஜனவரி மாதத்திலேயே இதற்கான சிப்பந்திகளை போட்டும் நாளது வரையில் இதற்கான பூரா தொகைகளும் கொடுக்கப்படாமல் இருந்து வருவதால் கஷ்டமாக இருக்கிறது. இது மூன்று வருஷகாலமாகிவிட்டதினால் அங்குள்ளவர்களுக்கு மிக கஷ்டமாகிவிட்டது. ஆகையினால் இப்போது 75 சத விகிதம் காம்பென்ஸேஷன் கொடுக்கப்பட்டது. மீதி 25 சதவிகிதம் கொடுக்கவில்லை. அதையும் சீக்கிரம் கொடுப்பதற்கு அரசாங்கம் முயற்சி எடுக்குமா ?

THE HON. SRI V. RAMAIAH : இப்போது காம்பன்சேஷன் கொடுக்கும் விஷயத்தில் அரசாங்கம் தீவிர அக்கரை காட்டி, இதில் நீண்ட காலமாக தாமதம் ஏற்பட்டு விட்டதினால் சட்ட பூர்வமாக எல்லா காரியங்களையும் பார்த்து கொடுப்பதற்கு முன்னால் உடனடியாக 75 சதவிகிதம் கொடுப்பதற்கு அரசாங்கம் ஏற்பாடு செய்திருக்கிறது. இதன் மூலம் அங்குள்ளவர்களுக்கு நல்ல நன்மை கிடைத்திருக்கிறது.

SRI V. K. KOTHANDARAMAN : இந்தத் திட்டத்திற்கு நிலம் ஆர்ஜிதம் செய்யப்பட்டதில் 27 ஏக்கருக்கு $17\frac{1}{2}$ லட்சம் ரூபாய் நஷ்ட ஈடு கொடுப்பதற்கு நடவடிக்கை எடுக்கப்பட்டிருக்கிறது என்று வெளி வந்த தகவலின்பேரில் என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டது ?

THE HON. SRI V. RAMAIAH : அதைப்பற்றி என்னிடம் இப்போது தகவல் இல்லை.

SRI K. VINAYAKAM : Is it a fact that while assessing the compensation to be paid to landowners, a heavy amount was fixed by assessing the value of oak, pine and rubber trees which are not worth the quantity and many of them are not existing in the land but they were brought in the records and a heavy assessment was made?

MR. SPEAKER : How does the hon. Member know all these facts not mentioned in the answer given by the Hon. Minister? How does it arise?

SRI K. VINAYAKAM : It concerns compensation.

MR. SPEAKER : The hon. Member has given some information.

SRI K. VINAYAKAM : Sir, I have asked, whether it is a fact . . .

MR. SPEAKER : Then it is all right.

THE HON. SRI V. RAMAIAH : I have given a detailed answer as per which any compensation to be paid will be strictly according to the Land Acquisition Act.

25th September 1958]

**Sri J. MATHA GOWDER** : சிலருக்கு இந்த காம்பென்ஸேஷன் தொகை அதிகமாக கொடுப்பதற்கு மதிப்பிட்டிருக்கின்ற காரணத்தால் அந்த தொகையை கொடுப்பதற்கு முடியாது என்று அரசாங்கம் பரிசீலனை செய்து கொண்டிருப்பதாக சொல்லப்படுவது சரியா ? இதன் காரணமாக பலர் கோர்ட்டுகளில் அரசாங்கத்தை எதிர்த்து ரிட் கொடுத்திருப்பதும் அரசாங்கத்திற்குத் தெரியுமா ?

**The Hon. Sri V. RAMAIAH** : நான் முதலில் சொன்ன பிரகாரம் இதில் லாண்ட் அக்கொவிஷஸின் ஆபீஸர் சட்டப் பிரகாரம் எந்த விதமாக கொடுக்கவேண்டும் என்று நிர்ணயிக்கிறார்களோ அதன் பிரகாரம் கொடுக்கப்பட்டு வருகிறது. அதன் பிரகாரம் கொடுக்கப்படவில்லையென்றால்தான் கோர்ட்டுக்கு போக முடியும்.

*Kodukkur-Ponparappai Road*

* 532 *Q*.—Sri K. R. VISWANATHAN : Will the Hon. the Minister for Local Administration be pleased to state—

(*a*) whether the formation of the road between Kodukkur and Ponparappai in Udayarpalayam taluk, Tiruchirappalli district, has been sanctioned; and

(*b*) if not, the reasons therefor?

The Hon. Srimathi LOURDHAMMAL SIMON : (*a*) & (*b*) The work has not yet been sanctioned. The question of including the work under the Village Road Programme of the Tiruchirappalli District Board is under consideration.

**Sri K. R. VISWANATHAN** : தலைவர் அவர்களே, இந்த பாட்டையானது பொன்பரப்பை முதலிய இடங்களிலுள்ளவர்களுக்கு உபயோகமாக இருக்கும் என்ற காரணத்தினால் இந்த ரோடு வேண்டும் என்று நாலைந்து ஆண்டுகளுக்கு முன்பாக மகஜர் மூலமாக கேட்டுக்கொண்டிருந்தும் இதுவரை ஸாங்ஷன் செய்யப்படாமல் இருப்பதற்கு காரணம் என்ன ?

**The Hon. Srimathi LOURDHAMMAL SIMON** : இப்போது அதைப் பற்றி பரிசீலனை செய்யப்பட்டு வருகிறது. பண வசதி கிடைத்தவுடன் இந்த ரோடு அவசியம் என்று தோன்றுமானால் அதற்கான நடவடிக்கை எடுக்கப்படும்.

**Sri K. PERIANNAN** : தலைவர் அவர்களே, திருச்சி ஜில்லாவில் பல இடங்களில் லோக்கல் டெவலப்மெண்ட் வேலைகள் எல்லாம் ஜில்லா போர்டின் மான்யத்தை எதிர்ப்பார்த்து நடைபெற வேண்டியிருப்பதால், பல வேலைகள் நடைபெறுவதற்கு தாமதம் ஆகிறது. ஆகவே இந்த ஜில்லா போர்டு மான்யம் உடனடியாக கொடுப்பதற்கு அரசாங்கம் நடவடிக்கை எடுக்குமா ?

**The Hon. Srimathi LOURDHAMMAL SIMON** : இதற்கு தனிக் கேள்வி வேண்டும்.

*Letters from Members of the Legislature*

* 533 *Q*.—Sri A. A. RASHEED : Will the Hon. the Chief Minister be pleased to state whether instructions have been given recently to various departments to cut short redtapism and to acknowledge expeditiously the letters received from the members of the Legislature?